# பகவத் பாதை




Bagavath Path

தனிச்சுற்றுக்கு மட்டும் | இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு | 15-10-2012




நாம் நமது மனோ இயக்கம் சம்பந்தமாக, நாமாகச் செயல்படுவதற்கு எதுவும் இல்லை என்பதைக் கண்டுகொள்வதே ஞானம்.

– ஸ்ரீ பகவத்



# இருவகைப் பிரச்சினைகள்

- ஸ்ரீ பகவத்

நமக்கு என்ன தேவை?

இன்பமா? மகிழ்ச்சியா?

அனைவரும் இன்பத்தை நாடுகிறோம்; மகிழ்ச்சியை விரும்புகிறோம்.

ஆனால் சோதனை என்னவென்றால், இன்பத்தைத் தொடர்ந்து, துன்பம் வந்துவிடுகிறது; மகிழ்ச்சியைத் தொடர்ந்து மனவருத்தம் ஏற்பட்டுவிடுகிறது.

துன்பத்தை நாம் கூப்பிடவில்லை; மன வருத்தத்தை நாம் கூப்பிடவில்லை. நாம் விரும்பி அழைத்தது, இன்பத்தையும், மனமகிழ்ச்சியையும் மட்டுமே. ஆனால் வந்தவையோ வேறு.

இன்பமும் துன்பமும் இரட்டைப் பிறவிகள். மகிழ்ச்சியும், மனவருத்தமும் இரட்டைப் பிறவிகள். ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப்போல், அவை ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரிக்கமுடியாது. அதுதான் இயற்கை. அனுபவித்துப் பார்த்த பிறகுதான் அது தெரிகிறது.

கடைசியில் ஒரு முடிவுக்கு வந்து விடுகிறோம்; 'இன்பமும் வேண்டாம், துன்பமும் வேண்டாம்; மனம் நிம்மதியாக இருந்தால் போதும்'.

இன்பதுன்பங்களால் பந்தாடப்படுபவர்கள் அனைவரும், கடைசியில், இந்த முடிவுக்குதான் வந்துவிடுகிறார்கள்.

மனம் நிம்மதியடைய, நாம் என்ன செய்யவேண்டும்? அல்லது என்ன செய்யக்கூடாது?

இது சம்பந்தமாக, நாம் நம் மனதின் செயல்பாட்டைப் பல கோணங்களிலும் ஏற்கனவே ஆய்வு செய்து விட்டோம்.

அதனால் நாம் என்ன முடிவுக்கு வந்துள்ளோம்?

"நமக்கு ஏற்படும் அக உணர்வுகள் - பயம், கோபம், வருத்தம் போன்ற அக அனுபவங்கள், அனைத்தும் நம்மைக்கேட்காமல், தாமாகத் தோன்றி தாமாக மறைந்துவிடுகின்றன. அவற்றைத் தீர்வு செய்ய நாம் எந்த முயற்சியையும் எடுக்கத்தேவையில்லை. அவற்றைச் சீரமைக்கும் முயற்சியே, நாம் விரும்பாத உணர்வுகளுக்கு உயிர் கொடுத்து அவற்றைப் புதுப்பித்துவிடுகிறது. அகத்தளவில் சும்மா இருத்தலே போதும்; எதுவும் செய்யத் தேவையில்லை என்பதைப் புரிந்து கொண்டாலே போதும்...

"ஆனால் புறச் செயல்களைப் பொறுத்து, நாம் எதுவும் செய்யாமல் சும்மா இருந்துவிடமுடியாது. புறச் செயல்கள் அனைத்தையும், நாமாக முயன்று தான் செய்தாக வேண்டும்...

"அகத்தில் சும்மா இருக்கவேண்டும்; புறத்தில் செயலோடிருக்கவேண்டும். சும்மா இருப்பதால் மட்டும் அகப்பிரச்சினை தீர்வடைகின்றது. செயலோடிருப்பதால் மட்டுமே புறப்பிரச்சினை தீர்வடைகின்றது."

இந்தக் கருத்து, பலருடைய பிரச்சினைகளைத் தீர்வு செய்து கொண்டு வருகின்றது.

ஆனால் சிலர் குழம்பிக் கொள்கிறார்கள். "பிரச்சினை தீர்ந்த மாதிரி இருக்கிறது; ஆனால் மீண்டும் வந்து விடுகிறது. புறப்பிரச்சினைகளைத் தீர்வு செய்ய முயற்சி செய்யும்போது அகப்பிரச்சினையும் உயிர் பெற்றுவிடுகிறதே? அகத்தில் சும்மா இருப்பது; அதேநேரத்தில் புறத்தில் செயலோடிருப்பது என்றால் என்ன? அது எப்படி சாத்தியம்?"

- இப்படி அவர்கள் வினவுகிறார்கள்.

நமக்குப் பிரச்சினை எங்கே இருக்கிறது?

நமக்கு அகத்திலும் பிரச்சினை இருக்கிறது; புறத்திலும் பிரச்சினை இருக்கிறது.

அகப்பிரச்சினையையும் தீர்வு செய்யவேண்டும்; புறப்பிரச்சினையையும் தீர்வுசெய்ய வேண்டும்.

நாம் எங்கு தீர்வு செய்தாலும், நமது பழக்கம் என்னவென்றால்,

நமது முயற்சியைப் பயன்படுத்தியே, நமது பிரச்சினைகள் அனைத்தையும் தீர்வு செய்கிறோம்.

ஆனால் இங்கு நமது அகத்தைப் பொறுத்த அளவில் முயற்சியின் இயலாமையைப் புரிந்து கொள்ள வேண்டியுள்ளது.

நமது பிரச்சினைகள் இரண்டு வகையாக உள்ளன. நமது பிரச்சினைகள், ஒற்றைப்பிரச்சினை, இரட்டைப்பிரச்சினை என, இரண்டு வகையாக உள்ளன.

ஒற்றைப் பிரச்சினையில், அகத்தில் மட்டும் தான் தீர்வு தேவைப்படுகிறது. புறத்தில் தீர்வு சாத்தியம் இல்லை.

இரட்டைப் பிரச்சினையில், அகத்திலும் தீர்வு தேவைப்படுகிறது; புறத்திலும் தீர்வு தேவைப்படுகிறது.

நாம் சிறுகச்சிறுக பணம் சேர்த்து, நாம் ஆசைப்பட்ட பைக் ஒன்றை வாங்கி வீட்டு வாசலில் நிறுத்தியிருக்கிறோம். இனிதான் பதிவு செய்து பதிவெண் வாங்கவேண்டும்; இன்ஸ்யூரன்ஸ் கட்டவேண்டும். வண்டியைக் கொண்டு வந்து நிறுத்திய இரவிலேயே மின்னல் தாக்கி வண்டி தீப்பிடித்து எரிந்து, வெடித்துச் சிதறிவிட்டது என வைத்துக்கொள்வோம்.

நமக்கு ஏற்பட்ட இழப்பு நமக்கு மனதில் வேதனையை ஏற்படுத்திவிடுகிறது.

"இனி எந்தக் காலத்தில் இப்படிப்பட்ட பைக்கை வாங்கமுடியும்? இன்ஸ்யூரன்ஸ் செய்து எடுத்து வந்திருந்தால் இந்த நஷ்டம் ஏற்பட்டிருக்காதே. இனி மீண்டும் சைக்கிளில் தான் போகவேண்டும். நண்பர்கள் எல்லோரும் துக்கம் விசாரிப்பார்களே."

- இப்படி அலை அலையாக நினைவுகள் ஏற்பட்டு, மனவேதனைக்கு உயிர் ஊட்டிக் கொண்டிருக்கின்றன.

இங்கு பைக் அழிந்துபோனது, புற நிகழ்வு. அது அழிந்தது, அழிந்ததுதான். அதைத் திரும்பப் பெறமுடியாது. பைக்கைத் திரும்பப் பெற்று, வெளிநிகழ்வுக்கு தீர்வு கண்டிடச் சாத்தியமில்லை.

இங்கு மனதில் மட்டுந்தான் தீர்வு காணவேண்டியது உள்ளது. மனவேதனை மட்டுமே தீர்வு காணவேண்டிய பிரச்சினையாக உள்ளது.

இதுதான் ஒற்றைப்பிரச்சினை. பிரச்சினை, வெளி நிகழ்விலிருந்து ஆரம்பித்தாலுங்கூட, வெளி நிகழ்வில் இனி எந்த மாற்றத்தையும் கொண்டுவர முடியாது. அகநிகழ்வில் மட்டுமே மாற்றம் தேவைப்படுகிறது. மனவேதனையிலிருந்து மட்டுமே விடுபட வேண்டியுள்ளது.

அடுத்தது இரட்டைப் பிரச்சினை. நம் வீட்டின் முன்பு நாம் கஷ்டப்பட்டு வாங்கிய பைக்கை நிறுத்தியுள்ளோம். பைக்கை எவனோ களவாடிச் சென்றுவிட்டான்.

பைக்கைப் பறிகொடுத்ததால் மனவேதனை ஏற்படுகிறது. - இது அகத்தில் ஏற்பட்டுள்ள பிரச்சினை. இதற்கு நாம் தீர்வு காணவேண்டும். காணாமல்போன பைக்கை விட்டுவிடமுடியுமா? அதையும் கண்டுபிடிக்க வேண்டியுள்ளது. இங்கு அகத்திலும் தீர்வு காணவேண்டியதுள்ளது; புறத்திலும் தீர்வு காண வேண்டியதுள்ளது. இதுதான் இரட்டைப் பிரச்சினை.

நம்மைச் சுற்றியுள்ள பிரச்சினைகள் யாவும் தொடர் பிரச்சினைகளாகவே உள்ளன. ஆகவே பெரும்பாலும் இரட்டைப் பிரச்சினைகளாகவே உள்ளன.

அகத்திலும், தீர்வு காணவேண்டியதுள்ளது; புறத்திலும் தீர்வு காண வேண்டியதுள்ளது.

"உள்ளே நாம் எதுவும் செய்யத்தேவையில்லை, வெளியே செயல்பட்டுத்தான் ஆகவேண்டும்" எனும்போது, பலரும் குழம்பிப் போவதற்கு வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

'எங்கே செயல்படுவது, எங்கே செயல் இல்லாமலிருப்பது' என்ற குழப்பம் ஏற்பட்டுவிடுகிறது.

ஒற்றைப் பிரச்சினையை நாம் எடுத்துக்கொண்டால்,

நாம் செய்வதற்கு என்ன இருக்கிறது?

வெளியே நாம் செயல்படுவதற்கான வாய்ப்பு எதுவுமே கிடையாது.

வாசலில் நிறுத்தியிருந்த பைக் அழிந்துபோனது, போனதுதான். அங்கே நாம் செய்வதற்கு என்ன இருக்கிறது? அங்கு நாம் செய்வதற்கு எதுவுமே கிடையாது.

அகத்தில் நமக்கு மனவருத்தம் ஏற்படுகிறது. அது சம்பந்தமாகவாவது நாம் செய்வதற்கு ஏதாவது இருக்கிறதா?

நமக்கு ஏற்படும் அக அனுபவங்கள் யாவும், தாமாக ஏற்பட்டு, தாமாகவே மறைந்துவிடுகின்றன.

ஒரு வாணம் வெடித்துச் சிதறி மறைந்து விடுவதைப் போல்,

நமக்கு ஏற்படும் அக உணர்ச்சிகள் யாவும்,

ஒரு வெடிப்பாகவே ஏற்பட்டு,

அக அனுபவத்தைக் கொடுத்துவிட்டு மறைந்துவிடுகின்றன.

நமது ஒவ்வொரு அக உணர்ச்சியின் ஆயுளும் ஒரு மைக்ரோ வினாடியே. அவை தாமாகவே மறைந்து விடுகின்றன.

நாம் அது சம்பந்தமாக ஏதாவது செய்வதற்கு முனையும் போதுதான்,

அந்த உணர்ச்சிகள் யாவும் மீண்டும் உயிர்பெற்று,

தேக்கமடைய ஆரம்பிக்கின்றன.

அந்த உணர்ச்சிகள் சம்பந்தமாக நாம் செய்வதற்கு எதுவுமே இல்லை என்பதைக் கண்டுகொண்ட நிலையில்,

அகப்பிரச்சினைக்கான தீர்வு,

தாமாகவே ஏற்பட்டுவிடுகின்றது.

ஆகவே,

ஒற்றைப்பிரச்சினை சம்பந்தமாக நாம் அகத்திலும் எதையும் செய்யத் தேவையில்லை; புறத்திலும் எதையும் செய்யத்தேவையில்லை.

ஒற்றைப்பிரச்சினையைத் தீர்ப்பதற்கு நாம் எந்தப் பொறுப்பையும் எடுத்துக்கொள்ளாத நிலையில்,

அந்தப் பிரச்சினை உடனடியாகத் தீர்வு பெற்றுவிடுமா?

மன அமைதி உடனடியாக ஏற்பட்டு விடுமா? அல்லது

மன அமைதி ஏற்பட, சற்றுக் கால அவகாசம் தேவைப்படுமா?

ஒரு மின்விசிறி ஓடிக்கொண்டிருக்கிறது. அதன் சுவிட்சை அழுத்தி நிறுத்திவிடுகிறோம். மின் இணைப்பு உடனடியாக துண்டிக்கப்பட்டு விடுகிறது.

ஆயினும், அந்த மின் விசிறி, சிறிது சிறிதாகத்தான் தனது சுழற்சியை நிறுத்தும்.

இதுபோல், நாம் நமது மன உணர்ச்சிகளை எதிர்த்து, நாமாக சீரமைக்கும் முயற்சிகளில் ஈடுபடாவிட்டாலுங் கூட,

நமது மனோ இயக்கம் சிறிது சிறிதாகத்தான் சமநிலைக்கு வரும்.

மனோ இயக்கம் சமநிலைக்கு வரவேண்டும் என நாம் நாமாக விரும்புவோமாயின்,

அது மீண்டும் மனப்போராட்டத்துக்கே வழி வகுத்துவிடும்.

ஆகவே, நாம் நமது மனோ இயக்கம் சம்பந்தமாக,

நாமாகச் செயல்படுவதற்கு எதுவும் இல்லை என்பதைக் கண்டுபிடித்துக் கொள்ளவேண்டும்.

நம் மனோ இயக்கம் சம்பந்தமாக எது நடந்தாலும்,

அது, தாமாக நடக்கும் இயக்கமாக மட்டுமே இருக்கவேண்டும். தானாகவே இயங்கும் மனம், தானாக தன்னைச் சரிசெய்துகொள்ளும்.

நமக்கு அங்கு வேலை இல்லை என்பதை மட்டும் நாம் புரிந்து கொண்டால் போதும்.

ஒற்றைப் பிரச்சினையைப் பொறுத்த அளவில் நமக்கு,

அகத்திலும் வேலை கிடையாது; புறத்திலும் வேலை கிடையாது. நமக்கு அங்கு வேலை இல்லை. எது நடந்தாலும் அது தாமாகத்தான் நடந்தாக வேண்டும். இப்படி, நாம் முழுக்க முழுக்க பொறுப்பை எடுக்காத நிலையில்,

நமது அகப்பிரச்சினை தாமாகத் தீர்வடைகிறது.

நம்மைப் பொறுத்தவரையில் அதற்குக் கூட நாம் பொறுப்பு எடுத்துக்கொள்வதில்லை.

'அது தீர்ந்தாலும் சரி; அந்தப்பிரச்சினை - அந்த மனவேதனை அப்படியே நீடித்தாலும் சரி, அது சம்பந்தமாக நமக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது'

- என்ற நிலையில் நாம் அதனைப் புரிந்து கொள்கிறோம்.

நமக்குப் பழக்கமில்லாத ஒருவர் நமது வீட்டுக்குள் நுழைந்தால்,

அவரை விசாரித்து நிர்வாகம் செய்யவேண்டிய பொறுப்பு நமக்கு உள்ளது.

ஆனால் நமக்குப் பழக்கம் இல்லாத ஒருவர் நமது பக்கத்து வீட்டினுள் நுழைவாரேயானால்,

அவரை விசாரித்து, நிர்வாகம் செய்யவேண்டிய பொறுப்பு நமக்கு ஏது?

அது அந்த வீட்டுக்காரரைச் சார்ந்தது. ஒருவேளை அவர் அந்த வீட்டுக்காரருக்கு வேண்டியவராகக் கூட இருக்கலாம்.

அப்படி நாம், நமக்கென எந்தப் பொறுப்பையும் சுமந்து கொள்ளாத நிலையில்,

நமது அகப்பிரச்சினைகள் தாமாகவே தீர்வடைந்துவிடுகின்றன.

ஒற்றைப்பிரச்சினையில் நாம் தீர்வு கண்டநிலையில்,

நாம் நமது மன இயக்கத்தையும் புரிந்துகொள்கிறோம்.

அதன்பிறகு நாம் இரட்டைப் பிரச்சினையை அனுகுவோமாயின்,

இரட்டைப்பிரச்சினையை எப்படி அணுகுவது என்பதும் நமக்குத் தெரிந்துவிடும்.

அகப்பிரச்சினையைப் பொறுத்த வகையில்,

ஒற்றைப்பிரச்சினைக்கும், இரட்டைப் பிரச்சினைக்கும் இடையே எந்த வித்தியாசமும் கிடையாது.

அக உணர்ச்சியைப் பொறுத்த அளவில் நாம் செய்வதற்கு எதுவுமே கிடையாது.

- அது ஒற்றைப் பிரச்சினையாக இருந்தாலும் சரி,

அல்லது இரட்டைப் பிரச்சினையாக இருந்தாலும் சரி,

புறச்செயலைப் பொறுத்தவரையில்,

இரட்டைப்பிரச்சினையில் நாம் செய்யவேண்டிய வேலை இருக்கிறது; செய்யவேண்டிய பொறுப்பு உள்ளது.

அங்கு ஏதோ ஒரு பெயருக்காக செய்யவேண்டிய வேலை இல்லை; நாம் முழு ஈடுபாட்டுடன் செய்யவேண்டிய வேலை அங்கு உள்ளது.

அங்கு நாம் நமது சாமர்த்தியத்தையெல்லாம் காட்டி,

நமது பொறுப்பில் வெற்றி வாகை சூடவேண்டும்.

அங்கு நம்மைக் கட்டுப்படுத்தும் சக்தி, தர்ம நியாயங்கள் மட்டுமே.

தர்மத்தின் அடிப்படையில் நாம் நமது முழு ஈடுபாட்டையும் காட்டி முயற்சி செய்யலாம்; செய்ய வேண்டும்.

புறத்தைப் பொறுத்தவரையில் வெற்றிதான் இலக்கு. அக உணர்ச்சிகளைப் பொறுத்தவரையில் தோல்விதான் இலக்கு.

வெற்றியடைய முயற்சி செய்யலாம். தோற்றுப்போவதற்காக எவராவது முயற்சி செய்வார்களா? எவராவது போராடுவார்களா?

அகத்தளவில் நாம் நமது இயலாமையை ஒப்புக்கொள்வதுதான்,

தோல்வியை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வதாகும்.

ஒற்றைப்பிரச்சினையைப் பொறுத்த அளவில், தோல்விதான் இலக்கு. நமது தோல்வியை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளவேண்டும்.

ஒற்றைப்பிரச்சினையைப் பொறுத்த வரையில் நமக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது.

அது பக்கத்து வீட்டுக்காரருடைய பிரச்சினை.

அங்கே நமக்கு எந்தப் பிரச்சினையும் கிடையாது.

இரட்டைப் பிரச்சினையைப் பொறுத்தவரையில்,

அக உணர்ச்சிகளை மட்டும் புறக்கணித்துவிடுகிறோம்.

புறக்கணிப்பது என்றால் என்ன?

"அது அப்படித்தான் ஏற்படும்; அதன் இயல்பு அப்படித்தான் உள்ளது; அது இருந்தால் இருந்து விட்டுப் போகட்டும்" - என அதற்கு முழுச் சுதந்திரம் கொடுப்பதுதான்,

- அதனைப் புறக்கணிப்பதாகும்.

இரட்டைப்பிரச்சினை என்பது, தொடர்பிரச்சினையாகக் கூட இருக்கலாம்.

அது தொடர்ந்து,

நமது அமைதிக்குச் சவாலாகக் கூட இருக்கலாம்.

தொடர்ந்து மனத்துயரத்தைக் கூட ஏற்படுத்திக் கொண்டிருக்கலாம்.

அதுதான் நமது இரட்டைப் பிரச்சினையின் மனோ அம்சம். (Psychological aspect)

நாம் செயல்படவேண்டிய பகுதிதான் செயல் அம்சம் அல்லது புற அம்சம். (Physical aspect)

செயல் அம்சம் என்பது நம்முடைய செயலைக் குறித்தாலும்,

சில சமயம் அங்கு தொடர்ந்து செயல்படமுடியாத நிலையும்,

காத்துக்கிடக்கவேண்டிய சூழ்நிலையும் கூட ஏற்படலாம்.

செயலைப் பொறுத்த அளவில், நம்மால் சாத்தியப்பட்ட செயலை, நமது சாமர்த்தியத்தைப் பயன்படுத்தி செயல்படுத்தும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

இரட்டைப் பிரச்சினையின் போதும், தொடர் மனப்பிரச்சினையைப் புறக்கணிக்கத் தெரிந்து கொண்டாலேயே,

இரட்டைப் பிரச்சினையின் பலம் தளர்ந்துவிடும்.

ஒற்றைப் பிரச்சினையைத் தீர்வுகண்ட ஒருவருக்கு இரட்டைப் பிரச்சினையில் தீர்வு காண்பதும் எளிதாகி விடும்.

அகத்தைப் புறக்கணித்த நிலையில் புறத்தை எதிர்கொள்வதும் எளிதாகிவிடும். 

## ?கேள்வி பதில்

கேள்வி : நான் பகவத் ஐயாவின் புத்தகங்களை முதலில் படிக்கும் போது மனம் மிகவும் இலேசாக இருப்பதை (Weightless) உணர்ந்தேன். சில நாட்களுக்குப் பிறகு பழையபடியே பிரச்சனைகளும், போராட்டங்களும் மீண்டும் வந்துவிட்டன. ஏன் முன்பு ஏற்பட்ட Relaxation இப்போது ஏற்படவில்லை? நான் இன்னும் நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டுமா? இதை எவ்வாறு புரிந்துகொள்வது?

பதில் : பொதுவாக இதுவரை, நாம் நமது மனதில் தோன்றும் நல்ல, தீய எண்ணங்களுக்கும், உணர்வுகளுக்கும் நாம் தான் காரணம் என்று நினைத்துகொண்டு இருந்தோம். உண்மையில், அப்படி நமக்கு ஏற்படும் நல்ல எண்ணங்கள் மற்றும் நல்ல உணர்வுகளால் நமக்கு எந்த விதமான பாதிப்பும் கிடையாது. ஆனால் நமக்கு ஏற்படும் தீய எண்ணங்கள் மற்றும் தீய உணர்வுகளை அப்படி விட்டுவிடாமல் அதனை எப்படி மாற்றுவது, எப்படிச் சீர் அமைப்பது என்றும், மேலும் மனதில் எப்போதும் நல்ல எண்ணங்களையும், உணர்வுகளையும் வைத்துகொள்ள என்ன செய்வது என்றும் நமக்குத் தெரிந்த எல்லாவிதமான ஆன்மிக வழிமுறைகளையும் கடைப்பிடித்தோம். ஆன்மிகப் பயிற்சி நேரங்களின் போது மனம் Relax ஆக இருக்கிறது. மற்ற நேரங்களில் போராட்டமும் பிரச்சினைகளும் தவிர்க்க முடியாதவை ஆகிவிடுகின்றன. நாம் எப்போதும் நிரந்தரமான தீர்வை நோக்கி முயற்சி செய்து கொண்டு இருக்கிறோம்.

இந்த நிலையில் தான் பகவத் ஐயாவின் புத்தகம் வழியாக மனதைப் பற்றிய புதிய அணுகுமுறையைத் தெரிந்து கொள்கிறோம். அதாவது மனம் இரண்டு வகையில் செயல்டுகிறது. அவைகளில் ஒன்று புறச்சூழலுக்கும் நமது இயல்புக்கும் தகுந்தாற்போல் மனதில் தாமாக ஏற்படும் எண்ணங்களும், உணர்வுகளும் ஆகும். அவற்றுக்கு நாம் பொறுப்பு கிடையாது. மற்றொன்று நாமாக சிந்திப்பதும், செயல்படுவதும் ஆகும். அவைகளுக்கு நாம் மட்டுமே பொறுப்பு என்பதும் ஆகும்.

முதன்முதலாக நமது மனதில் தாமாகத் தோன்றும் எந்த விதமான எண்ணங்களுக்கும், உணர்வுகளுக்கும் நாம் எந்த வகையிலும் பொறுப்பு இல்லை. அவை தாமாகத் தோன்றித் தாமாக மறைபவை, அவற்றின் ஆயுள் 1/2 வினாடி நேரம் மட்டுமே என்பதைத் தெரிந்து கொண்ட நிலையில், இதுவரை காலம் காலமாக மனதில் சுமந்து கொண்டிருந்த எத்தனையோ எண்ணங்கள், உணர்வுகள் அனைத்தும் அப்படியே மனதிலிருந்து கீழே இறக்கி வைத்து விடபட்டன. மனதில் Relaxation என்பது தானாகவே ஏற்படுகிறது. இந்த Relaxation-க்குக் காரணம் தாமாக ஏற்படும் எண்ணங்களுக்கும் உணர்வுகளுக்கும் நாம் காரணம் கிடையாது என்பதைப் புரிந்துகொள்வதால் ஏற்படுவது. வெயிலின் அருமை நிழலில் தெரியும் என்பது போன்ற நிலைக்கு நாம் வருகிறோம். மனதில் Relaxation கொஞ்ச நாட்களுக்கு நீடிக்கிறது.

"நான் நன்றாகப் புரிந்து கொண்டேன். புரிந்து கொண்ட எனக்கு எப்படிப் பிரச்சனைகளும், போராட்டங்களும் ஏற்படலாம்?" என நம்மை எதிர்த்து, நாமே போராடிவிடுகிறோம். "புரிந்து கொண்டேன்" என்ற ஓர் 'நான்'ஐ உருவாக்கிவிடுகிறோம். புரிந்து கொண்ட நானுக்கு, எப்போதும் போராட்டமும், பிரச்சனைகளும் ஏற்படக்கூடாது என எதிர்பார்க்கிறோம். நாமாக உருவாக்கிய 'நானே', தாமாக ஏற்படும் எண்ணங்களையும், உணர்வுகளையும் ஏற்க மறுக்கிறது. தாமாக ஏற்படும் எண்ணங்கள், உணர்வுகள், தாமாகவே மறைவதற்கு, நாமாக உருவாக்கிய 'நான்' போராட்டமே தடையாக உள்ளது.

'தாமாக ஏற்படும் எண்ணங்கள், உணர்வுகளை நாமாக மாற்றியமைக்க முடியாது' என்பதை, எப்போது நாமாக உருவாக்கிய நான் புரிந்துகொள்கிறதோ, அப்போது நாமாக உருவாக்கிய நான், தன்னுடைய இயலாமையைப் புரிந்துகொண்டு, தன்னைத்தானே எதிர்த்துப் போராடுவதில் இருந்து, போராட்டத்தைக் கைவிட்டுத் தன்நிலைக்கு வந்துவிடுகிறது. எப்போது நாமாக உருவாக்கிய நானின் பிடி தளர்ந்து விடுகிறதோ, அப்போதே தாமாக நடைபெறும் இயக்கம், எப்போதும் போல் தாமாக நடைபெறுகிறது. போராட்டமும், துயரமும் தாமாகவே மறைகின்றன.

நமக்குத் தெரியாமலேயே, தாமாக நடைபெறுகிற இயக்கத்தில் நம்மையறியாமலேயே முரண்பட்டால் தவறில்லை. நமக்கு நன்கு தெரிந்த நிலையில் போராடாமல் இருந்தால் போதும். தாமாக ஏற்படும் எல்லாம் தாமாகவே சரியாகிவிடும்.

புரிதல் என்பது எப்போதும் ஒன்று தான். புரிந்தால் புரிந்தது தான். எப்போதெல்லாம் நமக்கு நன்றாகத் தெரிந்து, நாமாகத் தான் தேவையில்லாமல் சிந்தித்துக் கொண்டும், செயல்பட்டுக் கொண்டும் இருக்கிறோம் என்பதைத் தெரிந்துகொள்கிறோமோ அப்போதே அத்தோடு அந்த நிலையிலேயே முடித்துக்கொண்டால் போதும். அனைத்தும் தாமாகவே சரியாகிவிடும்.

மனதில் பெரும்பாலும் தாமாக நடைபெறுகிற இயக்கம் நடைபெறும். அவ்வப்போது நாமாக இயக்கும் இயக்கம், தோன்றித்தோன்றி மறையும். தாமாக நடைபெறும் இயக்கம் 90% என்றால் நாமாக இயக்கும் இயக்கம் 10% மட்டுமே. நாமாக இயக்கும் இயக்கமான 10% ன் போராட்டம், பிடி தளர்ந்த நிலையில் தாமாக நடைபெறுகிற 90% இயக்கத்துடன் இணைந்து, 100% தாமாக நடைபெறுகிற இயக்கமாகவே மாறிவிடும்.

நாமாக இயக்கும் இயக்கத்தின் பயன்தான் என்ன? நாமாகச் சிந்தித்து செயல்படுவது என்பது நம்முடைய புற வாழ்க்கையான குடும்பம், உறவுகள், தொழில், சமுதாயம் என அவற்றில் எவ்வாறு நம்முடைய தொடர்பை வைத்துக்கொள்ள வேண்டும் என்பதைப் பற்றிய அறிவே ஆகும்.

நம்முடைய இயக்கமான புற முயற்சியால் மட்டுமே நம் வாழ்வு உயர்வடையும்; சமுதாயம் மாற்றமடையும். நம்முடைய புறச்செயல்களை வைத்து மட்டுமே சமுதாயம் நம்மை அங்கிகரிக்கிறதே தவிர மனதின் இன்னொரு இயக்கமான தாமாக நடைபெறுகிற இயக்கத்தை வைத்து அல்ல. தாமாக இயங்குகின்ற இயக்கத்தை முழுமனதுடன் ஏற்றுக்கொண்டு, நாமாகச் சிந்தித்துச் செயல்படுவதை, சிறப்பாகச் செய்து, அகத்தே, ஞானியாகவும், புறத்தே சிறந்த கர்மயோகியாகவும் திகழ்வோமாக. உதாரணமாக : புளியங்காயில் ஓட்டையும் பழத்தையும் பிரிக்கமுடியாது. அதே புளியம் பழத்தில் ஓடும், பழமும் ஒட்டாது. பழமும், ஓடும் வெறும் காம்பின் பிடிப்பில் மட்டுமே இருக்கும். இது போல் நமது வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும்.

"புரிவதற்கு முன்பு புளியங்காய்". "புரிந்தால் புளியம் பழம்".

V.A.P. சரவணன், சேலம்.
செல் : 99942-05880

## ஆன்ம ஞான இரகசியம்

ஆன்ம ஞான இரகசியம்
புரியாத போது இரகசியம்
புரிபவர்களுக்கு மட்டும்
சொல்ல வேண்டுமென
இரகசியக் காப்புப்
பிரமாணமும் உண்டு
சொல்லத் தெரியாததால்
இரகசியமாய் இருந்தது
சொல்லிப் புரியாததால்
இரகசியமாய் இருந்தது
வழி புரியாததால்
இரகசியமாய் இருந்தது
அடைய முடியாததால்
இரகசியமாய் இருந்தது
கற்பனை கதைகளும்
கட்டுக் கதைகளும்
இருப்பதை விட்டு
இல்லாத இடம் தேடும்
பயிற்சிகள், முயற்சிகள்
அனைத்தும் சேர்ந்து - அதன்
இரகசியத் தன்மையை
அடைகாத்து வந்தன
தோல்வியில் பலரும்
முட்டித் தவித்தனர்
இரகசியத் தன்மையும்
கெட்டுப் பட்டது
ஸ்ரீ பகவத் ஐயா
தெளிந்து வந்தார்
முயற்சியும் இல்லை
பயிற்சியும் இல்லை
கற்பனையும் இல்லை
காட்சியும் இல்லை
வழியைச் சொன்னார்
கதவுகள் திறந்தார்
ஞானம் மட்டுமே
வெட்ட வெளியாய்
(எளிமையாய் அடக்கமாய்
எல்லை யற்றதாய்
எதுவும் அற்றதாய்
அனைத்தும் உள்ளதாய்)
உள்ளும் புறமும்
நிரம்பி நின்றது
அனைத்திற்கும் இடமளித்து
அங்கேயே நின்றது.

**மரு. நா. கைலாசம்**
தலைவர், ஸ்ரீ பகவத் மிஷன்,
சேலம்.செல் : 94432-90559

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

இந்தப் பாதையின் பயணத்தில் இரண்டாம் ஆண்டில் அடி எடுத்து வைத்திருக்கும் இத்தருணத்தில் பல நல்ல காரியங்கள் நடந்தேறிக் கொண்டிருக்கின்றன. எந்தப் பெரிய நோக்கம் இல்லாமலும், எந்த எதிர்பார்ப்பும் இல்லாமலும் தான் நாம் இந்தப் பயணத்தை ஆரம்பித்தோம். நாம் எதிர்பார்த்தாலும், எதிர்பார்க்காவிட்டாலும், பல நல்ல நிகழ்வுகளும், திருப்பங்களும் நடந்துகொண்டுதான் இருக்கின்றன. இந்தப் பாதை பல புதியவர்களையும் சென்றடைந்து பலருக்கும் நல்வழியை காட்டிக்கொண்டிருக்கிறது. இது காலத்தின் கட்டாயம்.

ஐயாவின் ஞானவழியைப் பிறருக்கும் கொண்டு செல்லவும், தன் 'புரிதல்' - பற்றி சந்தேகமும் தடுமாற்றமும் கொண்டவர்கள் தெளிவு பெறவும், சத்சங்கம் அவசியம் என்பது உணரப்பட்டது. அதன் விளைவாக, பல ஊர்களிலும் கிளைகளும், சத்சங்கங்களும் அமைப்பதற்கான முயற்சிகள் தொடங்கின.

அந்த வகையில் ஸ்ரீ பகவத் மிஷனின் பணி சென்னையிலும் தொடங்கியிருக்கிறது. புதிய கிளை சென்னையில் உருவாகியுள்ளது. சென்னையைச் சேர்ந்த பல அன்பர்களின் கூட்டு முயற்சியில் இப்பணி ஆரம்பிக்கப்பட்டுள்ளது. 30-9-2012 அன்று பகவத் ஐயா அவர்கள் புதிய கிளையைத் திறந்து வைத்து பணியைத் தொடங்கி வைத்தார்கள். இவ்விழாவில் பலரும் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள்.

இனி ஐயாவின் புத்தகங்கள் மற்றும் CDகள் அனைத்தும் அங்கே கிடைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மேலும் வாரந்தோறும் சத்சங்கங்களும் நடத்தப்படவுள்ளன.

இந்த வாய்ப்பை சென்னை அன்பர்கள் தங்கள் நண்பர்களுக்கும் தெரிவித்து அனைவரும் பயன்பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இதைப்போன்றே இன்னும் பல கிளைகள் தொடங்க இருக்கின்றன. அடுத்ததாக மிக விரைவில் சேலம், பரமத்தி வேலூர், மயிலாடுதுறை மற்றும் திருப்பூர் ஆகிய ஊர்களில் நமது அன்பர்களின் முயற்சியால் கிளைகள் உருவாக உள்ளன.

பகவத் ஐயாவினால் தெளிவடைந்த பலரும் இணைந்து தங்கள் ஊரில் ஒரு கிளை அமைவதற்கான முயற்சியை மேற்கொள்வது உண்மையை தரிசிக்க முயற்சிக்கும் அனைவருக்கும் பயனாக இருக்கும்.

மேலும் ஒரு நற்செய்தி, திருப்பூரைச் சேர்ந்த நமது அன்பர் அருள் பிரகாசம் அவர்கள் சென்ற ஆண்டைப்போலவே காலமும், ஐயாவின் ஞானமும் காட்டும், 2013-ம் ஆண்டிற்கான புதிய காலண்டரை நமது பாதையில் பயணிப்பவர்கள் அனைவருக்கும் வழங்க ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார்கள். அவரது பணி சிறக்க பகவத் மிஷன் சார்பில் வாழ்த்துகிறோம்.

பகவத் பாதை மாத இதழ் பல நல்ல உள்ளம் படைத்த அன்பர்களின் முயற்சியால் பயணித்துக்கொண்டு இருக்கிறது. வாய்ப்பும், வசதியும் உள்ள அன்பர்கள் இப்பணியில் தங்களையும் இணைத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்,
**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,
செல் : 97891-65555

# பகவத் பாதையில் மலர்ந்த மலர்

ஞானமார்க்கத்தில் உள்ளவர்களும், தேடுதலை மனதில் நிரப்பி வைத்திருப்பவர்களும், ஏக்கத்துடன் எதிர்ப்பார்ப்பது ஒன்றுதான். உண்மை எங்குள்ளது? தேடுகின்றோம். தேடிக்கொண்டு தான் இருந்தோம். ஞானவிடுதலை என்ற ஒரு அதிசயமான நூல் கையில் கிடைக்கும் வரை.

பத்து வருடங்களாக, ஞானமார்க்கத்தில் நுழைந்து, ஒரு குருவின் மூலமாக அடிப்படைகளைத் தெரிந்து கொண்டு உபதேசம் பெற்று, தியானம் செய்ய ஆரம்பித்தோம். அதுவரை பழக்கப்பட்ட வாழ்க்கை நடைமுறைகளை ஞானமார்க்கத்துக்கு ஏற்றாற்போல் மாற்றிக் கொண்டோம். மனதுக்குள் ஒரு நிம்மதியும், வாழ்வில் ஒரு மாற்றமும் தெரிந்தது. உறவினர்கள் நண்பர்கள் அதிசயப்பட்டனர். ஆனால் தங்களை மாற்றிக்கொள்ள முன்வரவில்லை. இதுவரை கண்டிராத, கேட்டிராத, ஞானநூல்கள், சித்தர் பாடல்கள், சத்சங்கம் என எல்லாம் வந்து சேர ஆரம்பித்து மனமும், வாழ்வும் சீரடைய ஆரம்பித்தது. நாம் பெற்றதை மற்றவர் பெற வேண்டும் என முயற்சி எடுத்தபோது, அதற்கு வரவேற்பு சரிவர கிடைக்கவில்லை.

ஆண்டுகள் சில சென்றன. சில காரணங்களினால் சபை பிரிந்தது. பிறகு நண்பர்கள் மூலமாக மற்றொரு குருவிடம் உபதேசம் பெற்றோம். வள்ளலாரை மானசீக குருவாகக் கொண்ட அவரிடம் நாங்கள் தியானப் பயிற்சியைக் கற்றுக்கொண்டு அந்த தியானத்தையே நடைமுறைப்படுத்தினோம். தலைசிறந்த ஞானியான வள்ளலாரின் மானசீக சீடர்களாக, வாழ்க்கை நடந்து கொண்டிருந்தது. மன அமைதி, யதார்த்தமான வாழ்வு, ஜீவகாருண்யத்தை முதன்மையாக நிறுத்தும் வாழ்க்கை என காலம் சென்று கொண்டிருந்தது.

தியானம் மூலமாக அமைதி கிடைத்தது என்பது உண்மைதான். ஆனாலும் மனதில் சில கேள்விகள் எழாமலில்லை. தியானம், பிறகு? இந்தச் சமயத்தில்தான் நண்பரின் மூலமாக, ஒரு புத்தகம் கொடுத்தனுப்பப்பட்டது.

‘ஞான விடுதலை’ என்ற அந்தப் புத்தகம், எங்களுடைய வீட்டுக் குளிர்சாதனப் பெட்டிக்கு சேவை செய்ய வந்தவர் மூலமாக வந்து சேர்ந்தது. நண்பர் திரு. தியாகராஜன் தொலைபேசியில் கொப்பளிக்கும் ஆர்வத்துடன் சொன்னார். "அண்ணா, அந்தப் புத்தகத்தைப் படியுங்கள், படித்தால் கீழே வைக்கமாட்டீர்கள். படித்துவிட்டு என்னுடன் பேசுங்கள்"

படிக்க ஆரம்பித்தேன். படிக்கப் படிக்க ஒரு இனம் தெரியாத ஆவல் மனதைக் கவ்விக் கொண்டது. படித்துமுடித்தேன் முழு மூச்சில். உண்மையில் ஒரு மின்சாரக் கம்பியைத் தொட்டது போல இருந்தது. தமது தேடல், இதோ, முடிவடைந்துவிட்டது. அடுத்த ஒரு வாரத்திற்குள் பகவத் ஐயாவின் எல்லாப் புத்தகங்களையும் படித்து முடித்துவிட்டோம். இப்பொழுதெல்லாம், தினசரி ஒவ்வொன்றாக, பகுதிபகுதியாக, மறுபடிப்பு செய்கின்றோம். பகவத் ஐயா நம்மைப்போன்ற ஆழ்ந்த தேடலுடைய ஆன்மாக்களுக்கு வழிகாட்ட, இல்லை, சுட்டிக்காட்ட, ஆசீர்வதிக்கப்பட்டு அனுப்பப்பட்டவர்.

‘சுட்டிக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது’

எதை சுட்டிக்காட்டினார்? நம்மைப் போன்ற சன்மார்க்கிகளுக்குத் தெரியும்.

‘மனமது செம்மையானால் மந்திரம் செபிக்கவேண்டாம்’

‘சும்மா இரு! சொல்லற!’

‘எதுவும் செய்யாமலிருப்பது என்பது மனதை மூழ்கடிப்பது தான்’

‘மனதின் செயல்பாடுகளால் தான் எல்லாப் பிரச்சினைகளும் உருவாகின்றன’

‘மனதை எந்த அளவுக்கு ஒருவர் உபயோகப்படுத்துகின்றாரோ அந்த அளவுக்கு அவர் குழப்பமடைகின்றார்’.

‘யார் தனது மனதை நாசம் செய்கின்றார்களோ அவரது காலடியில் ‘டாவோ’ இருக்கும்’.

‘நீங்கள் மனம் திருந்தி குழந்தையாக மாறி வாராவிட்டால் உங்களால் தேவனது சாம்ராஜ்யத்தை அடையமுடியாது’

‘பரிசுத்தமான மனதின் மூலமாகத்தான் ஒன்றேயான பரப்பிரம்மத்தை அடையமுடியும்’

ஞானிகள், சித்தர்கள், உபநிடதங்கள் என எல்லோரும் மனதைப்பற்றியே குறிவைத்துப் பேசுகின்றனர். ஆனால் அந்த மனதை எவ்வாறு செம்மைப்படுத்துவது, பரிசுத்தமாக்குவது, நாசம் செய்வது, குழந்தை மனதாக மாற்றுவது என சொல்லப்படவேயில்லை!

முதன்முறையாக, மிக எளிமையாக, தெளிவாக பகவத் ஐயா இந்த பாதையைச் சுட்டிக் காட்டியுள்ளார்! இறைவன் சித்தம் இந்தப் பாதை பகவத் ஐயா மூலமாக உலகுக்கு வெளிப்படவேண்டும் என்று! ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் இந்தப்பாதையில் சேருவர். பகவத் ஐயா சொல்லியபடி உறைந்துபோன ஆன்மாக்கள் உருகி பிரவாகமாகப் பாய்ந்தோடுவர்!

இந்த ஞான இரகசியத்தை பகவத் ஐயாவின் ஆசியுடன், தேடுதல் உள்ள மக்களினிடையே பரப்பும் பணியில் ஈடுபட்டுள்ளோம்.

23 வருட வங்கிப்பணி, 15 வருட கணிணித்துறை சேவை வர்த்தகம் இவைகளை முடித்த பிறகு, வாழ்க்கையின் உண்மையான அடிப்படை, பகவத் ஐயாவினால் தெரிய வைக்கப்பட்டுள்ளது.

நன்றியுடன்

**சுகுமார் சீனிவாசன்,** தலைவர்,
ஸ்ரீபகவத் மிஷன், சென்னைக் கிளை
செல் : 98840 97438

## ஐயாவுடன் “சத்தரிசனம்”

இடம் : சத் தரிசனம், ஆனைக்கட்டி, கேரளா - நாள் : 26-10-2012 முதல் 29-10-2012 வரை

இங்கு தங்கும் வசதி குறைவாக இருப்பதால் தங்கிச்செல்ல விரும்புவர்கள் மட்டும்

திரு. ஆனந்தக்குமார், செல் : 98422-31583 என்ற எண்ணில் உறுதி செய்து கொண்டு வருமாறு கேட்டுக்கொள்கிறோம்.

வழி : கோவை - ஆனைக்கட்டி - கோட்டத்தரா - வடக்கோட்டத்தரா - சத் தரிசனம், காத்தாடி வீடு.

# வேண்டுகோள்

நமது இதழான பகவத் பாதையை படித்தவர்கள் பலரும், தாங்கள் எவ்வாறு பலன் பெற்றார்கள் என்பதைத் தெரிவித்து வருகிறார்கள். இதழ் தாமதமாக வரும்போது பலரும் தொலைபேசியில் தொடர்பு கொண்டு "ஏன் இன்னும் வரவில்லை. ஒரு வேளை அனுப்பியது தவறிவிட்டதா" என விசாரிக்கிறார்கள்.

நமது இதழை பலரும் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள் என்பதுதான் நம் இதழுக்கு கிடைத்த வெற்றி. நமது இதழை வெற்றிகரமாக நடத்தப் பலரும் ஆதரவு காட்ட முன்வந்து கொண்டிருக்கிறார்கள்.

நமது இதழை புதியவர்களுக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்ற முயற்சியில் அதிகமாகவே தயார் செய்து வினியோகித்து வருகிறோம். மாதம்தோறும் 4000 பிரதிகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. தேவையைக்கருதி 5000 மாக உயர்த்தும் எண்ணமும் உள்ளது.

பயன் அடைபவர்களின் ஒத்துழைப்பு தேவைப்படும் தருணத்தில், நடைமுறை சிக்கலைப் பகிர்ந்துகொள்வது தான் முறையாகும். ஏனெனில் நாம் செய்வது ஒரு கூட்டுமுயற்சியே, 4000 பிரதிகள் அச்சிடும் நிலையில் அதை வினியோகித்தலோடு சேர்த்து சராசரியாக ஒன்றுக்கு ரூபாய் 8 ஆகிறது.

**பகவத் பாதை இதழுக்கான ஒரு மாத செலவு :**

| | |
|---|---|
| இதழ் 1க்கு (தபால் மற்றும் கொரியர் செலவு உள்பட) | - ரூ.8/- |
| மொத்தம் அச்சிடும் இதழ் | - 4000 X 8-00 = ரூ.32,000/- |
| (சந்தா ரூ. 100 செலுத்தியவர்கள் எண்ணிக்கை 350) | |
| இதன் மூலம் மாதந்தோறும் செலவுக்காக எடுக்கும் தொகை {35,000 / 12 மாதம்} | = ரூ.2,917/- |
| மாதம் 1க்கு அதிகப்படியாக ஆகும் செலவு தொகை | = ரூ. 29,083.00 |
| அப்படியெனில் வருடத்திற்கு பகவத் பாதைக்கு ஆகும் கூடுதல் செலவு : | = ரூ. 3,48,996.00 |

இது தவிர காலண்டர் அனுப்பும் மாதத்தில் Courier கட்டணம் நபர் ஒன்றுக்கு ரூபாய் 20 செலுத்தவேண்டி இருக்கிறது.

| | |
|---|---|
| கடந்த வருடம் செலவான தொகை சுமார் 20 X 3000 | = ரூ. 60,000.00 |
| ஆக ஆண்டுக்கு ஆகும் செலவு | = ரூ. 4,08,996.00 |

இதை யாரோ ஓரிருவர் சுமந்து செல்ல விடலாமா? அல்லது எல்லோரும் பகிர்ந்து கொள்ளலாமா?

தகுதி உள்ளவர்கள் எவ்வாறு உதவுவது?

பங்கேற்று உதவ விரும்புபவர்கள் பின்வரும் ஏதாவது ஒரு வழியில் பங்கேற்றுக்கொள்ளலாம் :

1. சந்தாதாரர் - ரூ. 100/- (1 ஆண்டு), ரூ. 200/-(2 ஆண்டு), ரூ. 300/-(3 ஆண்டு),
2. ஆயுள் சந்தாதாரர் - ரூ. 1000/-
3. ஆண்டு நன்கொடையாளர் - ரூ. 1000/- (ஆண்டு ஒன்றுக்கு)
4. ஆயுள் நன்கொடையாளர் - ரூ. 10,000/-

நன்கொடை மற்றும் சந்தா அனுப்புபவர்கள் **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் சேலத்தில் செல்லதக்க **Cheque, D.D.** அல்லது **M.O.** ஆக அனுப்பலாம். அல்லது, **HDFC, A/c. No. 15907620000075, NIFT IFSC : HDFC 0001590** என்ற எண்ணில் நேரடியாக செலுத்தலாம்.



ஸ்ரீ பகவத் மிஷன்,
தலைமையகம், சேலம்.

சென்னைக் கிளை திறப்புவிழாவில்








ஸ்ரீ பகவத் மிஷன்,
சென்னைக் கிளை.



**மரு. நா. கைலாசம்,** தலைவர்.
ஸ்ரீ பகவத் மிஷன்,தலைமையகம்,சேலம்.

## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 30-10-2012<br>31-10-2012 | கோயமுத்தூர் | **கலந்துரையாடல்** | திரு. ஆனந்தக்குமார் - 9842231582 |
| 01-11-2012<br>வியாழன் | மனவளக்கலை மன்றம்,<br>சிவகிரி, ஈரோடு. | **தன்னை அறியும் ஞானம்**<br>மாலை 5-30 to 8-00 மணிவரை | திரு. தேவசேனாதிபதி ஐயா - 9095767656<br>திரு. Dr. பொன்குமார் - 9095420270 |
| 04-11-2012<br>ஞாயிறு | மாதவா ஹால்,<br>61, பெரம்பூர், பேரக்ஸ் சாலை,<br>புவனேஸ்வரி தியேட்டர் எதிர்புறம், வேப்பேரி, சென்னை-7, | **அன்றாட வாழ்வில் ஆன்ம ஞானம்**<br>மாலை 5-30 to 8-00 மணிவரை | Sri Bagavath Mission,<br>Chennai Centre,Ambattur. - 9884592141<br>7299108757 |



# ஜென் கதை
## 'நீர்ச் சுழல்'

ஒருநாள் கன்பூசியஸ், ஒரு மிகப்பெரிய அருவியின் முன் நின்று கொண்டு இருந்தார். அது மிகுந்த உயரத்தைக் கொண்டது. அதனால் ஏற்படும் சுழலில் இருந்து யாரும், எதுவுமே தப்பமுடியாது. அப்போது முதியவர் ஒருவர் உயரத்திலிருந்து விழும் அந்த அருவியுனுள் செல்வதைக் கன்பூசியஸ் கண்ணுற்றார். இது அவருக்கு மிகுந்த வியப்பைக் கொடுத்தது. உடனே அவர் தமது சீடர்களை அழைத்து, முதியவரைக் காப்பாற்றும்படிக் கூறினார். ஆனால் அதற்கு முன்பாக அந்த முதியவரோ எளிதாக கரையேறிவிட்டார்.

கன்பூசியஸ் அவரிடம் வந்து வியப்புடன், “நீங்கள் எப்படி இந்தச் சுழலிலிருந்து, தப்பிப் பிழைத்தீர்கள்?” என்று கேட்டார்.

"நான் ஆற்றில் நீந்த மிகுந்த ஆசைப் படுபவன். இது எனக்கு ஓர் இனிய அனுபவம்" என்றார் முதியவர்.

இதனை விளக்கும்படி கேட்டார் கன்பூசியஸ்.

"நீர் வீழ்ச்சியில் தோன்றும் சுழலை எதிர்த்து நான் போராடவில்லை. அதனுடைய போக்கிலேயே இருந்தேன். அந்தச்சுழல் கீழே செல்லும் பொழுது குறுகிக்கொண்டே வந்து பாதாளத்தில் மிக மெல்லியதாகி விடுகிறது. அங்கு அதன் சக்தி மிகக் குறைவாகவே இருக்கும். நான் அதனுடன் இணைந்து கீழே சென்றுவிட்டதால் அந்தச் சூழலே என்னை வெளியே தள்ளி விட்டது. நான் எந்த முயற்சியுமே செய்யவில்லை" என்றார்

(நன்றி : தாவோ தெளிவாக வாழும் கலை,பாபு பதிப்பகம், திருச்சி)

நமது மனத்துயரமும் அருவியின் நீர்ச்சுழலை போல் வாழ்வையே மூழ்கடிக்கும் அளவு அதிபயங்கரமானதுதான், அதை எதிர்த்து போராடும் வரை.

மனத்துயரத்தை எதிர்த்து போராடாமல் ஏற்றுக்கொள்ளும்போது அதுவே நம்மை விடுவித்து விடுகிறது.

**J. சரண்குமார்**
Zen Sung அகநூலகம், திருச்சி.
செல் : 9894012639




நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

*To*

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.